மகாகவி

# பாரதியார்



அறிஞர் C. N. அண்ணதுரை
கவிஞர் பாரதிதாசன்





கலை மன்றம்
சென்னை-1

# பொருளடக்கம்

(பாரதிதாசன்)



(சி. என். அண்ணாதுரை எம். ஏ.,)

# தெரிந்துகொள்ளுங்கள்

இந்நூல் உண்மை பாரதியாரை நன்கு உணர்ந்து கொள்ளவும், அவர் பெயரால் நடை பெறும் ஏமாற்றுச் செயல்களுக்கு மக்கள் இரை யாகாம லிருக்கவும் உதவும் என்ற நம்பிக்கை யுடன் வெளியிடுகின்றோம்.

இதன் நூலாசிரியர்கள் உலகப் பெருங்கவி பாரதிதாசன், உலகப்பேரறிஞர் அண்ணாதுரை ஆவார்கள் என்றால் இதன் பெருமையை எழுதிக் காட்ட இயலுமா? படித்து தெரிந்து கொள் ளுங்கள்.

இதனை வெளியிட அனுமதி தந்த ஞாயிறு நூற் பதிப்பகத்தாருக்கும், இதனை வெளி யிட உதவி புரிந்த முரசொலி பதிப்பகத்தாருக்கும் எங்கள் நன்றி!

வணக்கம்

**கலைமன்றத்தினர்.**

மகா கவி

# பாரதியார்

பாரதியார் உலககவி!—அகத்தில் அன்பும்
பரந்துயர்ந்த அறிவினிலே ஒளியும் வாய்ந்தோர்!
ஒருருக் கொருநாட்டுக் குரிய தான
ஒட்டைச் சாண் நினைப்புடையார் அல்லர். மற்றும்,
வீரர் அவர்!—மக்களிலே மேல்கீழ் என்று
விள்ளுவதைக் கிள்ளிவிட வேண்டும் என்போர்!
சீருயர்ந்த கவிஞரிடம் எதிர்பார்க்கின்ற
திவ்யநலம் எல்லாமும் அவர்பாற் கண்டோம்.

அகத்திலுறும் எண்ணங்கள், புவியின் சிக்கல்
அறுப்பவைகள்; புதியவைகள். அவற்றையெல்லாம்,
செகத்தார்க்குப் பாரதியார் சித்தி ரிப்பார்
தெளிவாக, அழகாக, உண்மை யாக!
முகத்தினிலே களையிழந்த மக்கள் தம்மை
முனைமுகத்தும் சலியாத வீர ராக்கப்
புகுத்துமொளிப் பேச்செல்லாம், கங்கை யாற்றுப்
புனல்போலத்தொடர்வதுண்டாம் அன்னார்பாட்டில்!

பழயநடை, பழங்கவிதை, பழந்தமிழ்நூல்,
பார்த்தெழுதிப் பாரதியார் உயர்ந்தா ரில்லை!
பொழிந்திடு சன் னத்த உள்ளம் கவிதை யுள்ளம்
பூண்டிருந்த பாரதியா ராலே இந்நாள்,
அழுந்தியிருந் திட்டதமிழ் எழுந்த தென்றே
ஆணையிட்டுச் சொல்லிடுவோம் அன்னைமீதில்!
அழகொளிசேர் பாரதியார் கவிதைதன்னை
அறிந்திலதே புவிஎன்றால், புவிமேற் குற்றம்!

கிராமியம் நன் னாகரிகம் பாடி வைத்தார்;
கீர்த்தியுறத் தேசியம் சித்தி ரித்தார்;
சராசரம்சேர் லௌகிகத்தை நன்றாய்ச் சொன்னார்.
தங்குதடை யற்ற உள்ளம், சமத்வ உள்ளம்,
இராகதென ஒன் றில்லாப் பெரிய உள்ளம்,
இன்புள்ளம் அன்புள்ளம் அன்னார் உள்ளம்!
தராதலத்துப் பாஷைகளில், அண்ணல் தந்த
தமிழ்ப்பாட்டை மொழிபெயர்த்தால் தெரியும்சேதி!

ஞானரதம் போலொருநூல் எழுதுதற்கு
நானிலத்தில் ஆளில்லை. கண்ணன் பாட்டுப்
போல்நவிலக் கற்பனைக்குப் போவதெங்கே?
புதியநெறிப் பாஞ்சாலி சபதம் போலே
தேனினிப்பில் தருபவர்யார்? மற்றும் இந்நாள்,
ஜெயபேரி கைகொட்ட டாஎன் றோதிக்
கூனர்களும் குவலயத்தை அளாவும் வண்ணம்
கொட்டிவைத்த கவிதை திசை எட்டும் காணோம்!

"பார்ப்பானை ஐயரென்ற கால மும்போச்
சே"யென்று பாரதியார் பெற்ற கீர்த்தி,
போய்ப்பாழும் கிணற்றினிலே விழாதா என்று
பொழுதெல்லாம் தவங்கிடக்கும் கூட்டத்தார்கள்
வேர்ப்பார்கள்; பாரதியார் வேம்பென்பார்கள்;
வீணுக 'உலககவி' அன்றென் பார்கள்.
ஊர்ப்புறத்தில் தமக்கான ஒருவனைப்போய்
உயர்கவிஞன் என்பார்கள் வஞ்ச கர்கள்!

சாதிகளே இல்லையடி பாப்பா என்ருர்!
தாழ்ச்சி உயர்ச்சிகள் சொல்லல் பாவம் என்ருர்.
சோதிக்கின் "சூத்திரற்கோர் நீதி தண்டச்
சோறுண்ணும் பார்ப்புக்கு வேருேர் நீதி"
ஓதியதைப் பாரதியார் வெறுத்தார் நாட்டில்!
ஒடுக்கப்பட்டார் நிலைக்கு வருந்தி நின்ருர்!
பாதிக்கும்படி "பழமை பழமை என்பீர்;
பழமை இருந் திட்டநிலை அறியீர்" என்ருர்.

தேசத்தார் நல்லுணர்வு பெறும் பொருட்டுச்
சேரியிலே நாள்முழுதும் தங்கி யுண்டார்!
காசு தந்து கடைத்தெருவில் துலுக்கர் விற்கும்
சிற்றுணவு வாங்கி, அதைக் கனிவாய்த் தின்ருர்!
பேசிவந்த வசைபொறுத்தார்! நாட்டிற் பல்லோர்
பிறப்பினிலே தாழ்வுயர்வு பேசு கின்ற
மோசத்தை நடக்கையினுல், எழுத்தால், பேச்சால்
முரசறைந்தார். இங்கிவற்ருல் வறுமை ஏற்ருர்!

வையத்து மாக்கவிஞர் மறைந்து போனர்!
வைதிகர்க்குப் பாரதியார் பகைவ ரேனும்,
செய்வதென்ன? மேலுக்குப் புகழ்ந்தே வந்தார்!
சில நாட்கள் போகட்டும் என இருந்தார்.
உய்யும்வழி கெடாதிருக்க மெதுவாய் இந்நாள்
உலககவி அல்ல அவர் எனத் தொடங்கி,
ஐயர்கவி தைக் கிழக்கும் கற்பிக் கின்ருர்;
அழகாக முடிச்சவிழ்த்தால் விடுவார் உண்டா!



# பாரதியார்

" செந்தமிழ் நாடென்னும் போதினிலே "

[என்ற பாடல் உற்பத்திக்குக் காரணம்.]

——[]——

தமிழ்நாட்டைப் பற்றித் தமிழ்க்கவிகள் தந்தால்
அமைவான பாட்டுக் களிப்போம் பரிசென்று,
சான்ற மதுரைத் தமிழ்ச் சங்கத்தார் உரைத்தார்.
தேன்போற் கவிஒன்று செப்புகநீர் என்று
பலநண்பர் வந்து பாரதி யாரை
நலமாகக் கேட்டார்; அதற்கு நமதையர்,
என்கவிதான் நன்று யிருந்திடினும் சங்கத்தார் [தான்
புன்கவிஎன் றே சொல்லிப் போட்டிடுவார்; போட்டால்
சங்கத்தில் சர்க்கார் தயவிருக்கும்! ஆதலினால்,
உங்கட்கு வேண்டுமெனில் ஓ துகின்றேன் என்றுரைத்
அந்தவிதம் ஆகட்டும் என்றார்கள் நண்பரெலாம். [தார்!
'செந்தமிழ் நாடென்னும் போதினி லேயின்பத்
தேன்வந்து பாயுது காதினி லே' என்
றழகுத் தமிழ்நாட்டை அப்படியே நெஞ்சால்
எழுதி முடித்தார்! இசையோடு பாடினார்!
காதினிக்கும் நல்ல கருத்தினிக்கும் பாட்டிந்நாள்
மேதினியிற் சோதி விளக்கு!

———

# பா ர தி யா ர்

## திருப்பள்ளி யெழுச்சி

—o—

நற்பெரு மார்கழி மாதமோர் காலே
நமதுநற் பாரதி யாரொடு நாங்கள்
பொற்பு மிகும்மடு நீரினில் ஆடிடப்
போகும் வழியினில் நண்பர் ஒருவரைப்
பெற்ற முதுவய தன்னேயார் ஐயரே,
பீடுதரும் "திருப்பள்ளி யெழுச்சி" தான்
சொற்றிறத் தோடுநீர் பாடித் தருகெனத்
தூய்மைக் கவிஞரும் சென்றனர் ஒப்பியே.
நீல மணியிருட் காலே அமைதியில்
நெஞ்சு குளிரும் நெடுமரச் சாலேயில்,
கோல நடையிற் குதிக்கும் மகிழ்ச்சியால்
கோரி உடன்வரும் நண்பர்கள் மத்தியில்,
காலே மலரக் கவிதை மலர்ந்தது !
ககன முழுமையும் தேனலே பாய்ந்தது !
ஞாலப் "பொழுது புலர்ந்த" தென்றூர்ந்த
நல்ல தமிழ்க்கவி நாமடைந் தோமே!

—

# பா ர தி யா ர்

## நாடக விமர்சனம்

—— o ——

ஒருநாள்நம் பாரதியார் நண்ப ரோடும்
உட்கார்ந்து நாடகம்பார்த் திருந்தார். அங்கே,
ஒருமன்னன் விஷமருந்தி மயக்கத் தாலே
உயிர்வாதை அடைகின்ற சமயம்; அன்னோன்
இருந்த இடந் தனிலிருந்தே எழுந்து லாவி,
"என்றனுக்கோ ஒருவித மயக்கந் தானே
வருகுதையோ" எனும்பாட்டைப் பாட லானான்!
வாய்பதைத்துப் பாரதியார் கூவு கின்றார்:—

'மயக்கம்வந்தால் படுத்துக்கொள் வதுதானே
வசங்கெட்ட மனிதனுக்குப் பாட்டா' என்றார்!
தயங்கிப்பின் சிரித்தார்கள் இருந்தோரெல்லாம்.
சரிதானே பாரதியார் சொன்னவார்த்தை!
மயக்கம்வரும் மதுவருந்தி நடிக்கவந்தான்.
மயக்கவிஷம் உண்டதுபோல் நடிப்புக்காட்டும்
முயற்சியிலும் ஈடுபட்டான்! தூங்கிவிட்டால்,
முடிவுநன்றா யிருந்திருக்கும்; சிரம மும்போம்!

---

# பாரதியார்

## பட்டினி உபதேசம்!

—o—

கேளென்று சொன்னாலும் கேளாத நெஞ்சத்தை
வாளொன்று கொண்டு வருத்தாமல் நீ தம்பி
தந்திரத் தாலே சரிப்படுத்த லாம் கண்டாய்!
வந்த வறுமையிலே செம்மை வரச் செயலாம்.

o o o

அந்த விவரம் அறைகின்றேன் நீ கேட்பாய் :—
முந்தாநாள் நீ உண்ட மொச்சை விதைக்குழம்பு
நேற்றும் புசிப்பதற்கு நெஞ்சு கசந்திருக்கும்.
மாற்றிப் புசிக்க வழிதேடித் தானிருப்பாய்!
இன்று முருங்கக்காய் இட்டுப் பருப்பிட்டு
நன்று குழம்பிட்டு நாலுபிடி சோறுண்டாய்!
நாளைக்குக் கத்தரிக்காய், நாளன்று பீர்க்கங்காய்,
வேளைக்கு மாங்காய், விடிந்தால் புடலங்காய்
நித்தம் விதவிதமாய் நீ உண்பாய்; ஆனாலும்,
அத்தனையும்தெவிட்டும்; ஆசைவிடும். மேற்கொண்டே,

o o o

அண்டை அயலகத்தில் ஆமைவடை மோர்க்குழம்பு
கண்டால் அதுபோற் கறியுண்ண ஆசைவரும்.
ஆமைவடை மோர்க்குழம்புக் கப்பாலோ, நாகரிகச்
சீமை அவரைக்காய் சேமியாப் பாயாசம்!
வீட்டில் பதார்த்த விழாநடத்த ஆசையுண்டு;
மூட்டைப் பணம்வேண்டும் முள்ளங்கிப் பத்தையைப்போல்!

o o o

இட்டகூழ் இன்றைக்கு நன்றா யிராவிட்டால்,
பட்டினியாற் போட்டுவிடு; நாளைக்குப் பார்ப்பாய் நீ
இட்டதொரு கூழில் இனிமை கிளம்புவதை!
பட்டினியால் லாபம் பல.



# பா ர தி யா ர்

## அலங்காரக் குறும்பு !

——o——

ஊராரே கேளுங்கள் இந்த ஒருசேதி !
பாரதியார் என்மகனைப் பார்த்துப் பரிகசித்தார்.

o o o

ஏன் பாரதியாரே, என்மகன்உம் காரியத்தில்
தான்வந்து வீணில் தலையிட்டுக் கொண்டதுண்டா?
இல்லைஎன்று சொல்கின்றீர், அவ்வா றிருக்கையிலே
தொல்லை தரும் வார்த்தை என்மகனைச் சொன்னதேன் ?

o o o

ஏழ்மை கிழத்தன்மை நோய்கள் இவற்றையெல்லாம்
ஆழக் குழிதோண்டி அப்படி யே புதைத்துத்,
தேசத்தை மேல்நிலையிற் சேர்ப்ப தெனும் உங்கள்
ஆசையோ பேராசை! அப்படித்தான் ஆகட்டும்!
அச்செயலை நான்ஒன்றும் ஆக்ஷேபம் பண்ணவில்லை;
கச்சைகட்டி ஆடுங்கள்! கைதட்டிக் கூவுங்கள்!
எங்கள் செயலுண்டு யாமுண்டு, மற்றவிதம்
உங்களிடம் யாரையா ஓடிவந்தார்? சொல்லும்!

o o o

‘இளமையிற்கல் இளமையிற்கல்’ என்றந்த
இளம்பையன் வீதியிலே சொன்னான் எனில், நீர்
‘முதுமையில் மண் முதுமையில் மண்’ என்றே
எதிர்வந்து சொன்னீரே! எல்லாரும் கேட்டுக்
குலுங்க நகைத்தாரே! ஐயா, குறும்பில்
அலங்காரம் சேர்த்தீரோ அங்கு?



குறிப்பு: (பையனின் தந்தை, பாரதியாரிடம் பேசியதாகக் கூறியது கற்பனை.)

பாரதியார் முன்

## இரு பிரசங்கங்கள் !

—o—

சமரசசன் மார்க்கசங்கக் கட்டி டத்தில்
தகுதிரு வி. கலியாண சுந்த ரர்தாம்,
அமைவுடைய இளங்கோவின் கவிந யத்தை
அமுதம்போல் எடுத்துரைத்தார் பிரசங்கத்தில் !
தமைமீறிப் பொங்கியெழும் சந்தோ ஷத்தால்,
தடதடெனக் கரகோஷம் செய்தார் ஐயர் !
நமதுதமிழ் இனிமைதனைக் கண்டுகொள்க
நானிலமே என்றன தம் விழியும் மார்பும் !
அடுத்தபடி வேறொருவர் பிரசங் கித்தார் ;
அவர் கோணிக் குரங்குபோல் ஆடி ஆடி,
எடுத்தெடுத்துப் பாடினர் தாயுமானர்
எழிற்பாட்டை அழுகுரலில் ! அவர், சனத்தைப்
படுத்தாத பாடில்லை ! கோபத் தாலே
பாரதியார் 'யாரடா இவன்' என்றார். நான்
தடுத்துவிட்டேன் ! எழுந்திரென்றார். ததாஸ்து சொன்
சபைத்தலைவர், பிரசங்கி சபையில் மீந்தார் ! [னேன்.

---

# சமத்வ உள்ளம்

—o—

யானும் கோஷும் பேசியிருந்தோம்,
என்றார் பாரதியார் என்னிடத்தில்!
வெளியிற் சென்று வீடு வந்தவர்
மேலுடை கழற்றவும் இல்லை; மேலும்,
ஐயர் கண்களில் அழகு குறைந்ததால்
அங்கு நடந்ததைக் கேட்டேன் ஐயரை!
எல்லாரும் சமம் இல்லையா என்றார்.
என்ன நடந்த தென்றேன். ஐயர்,
ஒன்று மில்லை உட்கார் என்றார்.
உட்கார்ந்திட்டோம் ஐயரும் நானும்!
யானும் கோஷும் பேசி யிருக்கையில்,
எவனோ கோஷின் காலில் விழுந்தான்.
"நீரும் இவ்விதம் ஊரார் வணங்கச்
சீரும் சிறப்பும் தேட லாமே"
என்றுசொன்னார் கோஷ் என் னிடத்தில்.
மரியாதை எனல் உண்டு;
பெரியார் சிறியார் இல்லைஎன் றாரே!

---

# பாரதியாரும் நாடகமும்

—o—

நற்சரிதை நற்கவிதை, நல்ந டிப்பு
நாடகத்தில் பாரதியார், அமைக்க எண்ணி
முற்காலம் காளிதா ஸன்பு கன்ற
"சாகுந்தளம்" நடத்த முடிவு செய்தார்.
உற்றநண்பர் சீனிவா சாச்சா ரிக்குச்
சகுந்தலையின் வேடந்தான் உரியதென்றார்.
பற்றறுவிஸ் வாமித்ரர் வா. வே. சுக்காம்;
பகரறிய துஷ்யந்தன் நான்தான் என்றார்!
தொண்டுசெயப் பலநண்பர் காத்திருந்தோம்.
துடைநடுங்கும் தமிழ்நாடு, தேச பக்தர்
அண்டுமந்தக் காரியத்தில் அண்ட வில்லை.
அருங்கவியின் நாடகத்தை இழந்தார் மக்கள்.
வண்டிவண்டி யாய்க்குப்பை கூள மெல்லாம்
வாரிப்போய்ப் பாரதியார் போட்டி ருப்பார்;
கொண்டுவந்து சேர்த்திருப்பார் நாடகத்தில்
குளிர்நிலவை, ஒளிநிலவை, அற்புதத்தை!

—

# பாரதியாரும் பையனும்

—o—

கொஞ்ச வயதுடையான்—அவன்
கூனற் கிழவனைப்போல்,
அஞ்சி நடந்துசென்றான்—ஐயர்
ஆரடா தம்பியென்றார்!
அஞ்சலி செய்துநின்றான்—ஐயர்
அவனிடம் உரைப்பார்:—
"நெஞ்சு நிமிர்ந்துநட!—உன்
நேரில்அச் சேவலைப்பார்!"

சொன்னசொல் பையனுளம்—தனில்
சுடர் கொளுத்திடவே,
முன்னைய கூனல்நடை—தனை
முற்றும் அகன்றவனாய்ச்,
சென்னிதனை நிமிர்த்திக்—கொஞ்சம்
சிரிப்பையும் காட்டிச்,
சன்னத்த வீரனைப்போல்—அந்தச்
சாலை வழிநடந்தான்!

---

# பாரதியார் புகழ்

—o—

(தில்லானா மெட்டு)

இ-ம்: நாட்டை] [தா-ம்: ஆதி

பல்லவி

தோயுந்தேன் கவிதரு நம்
சுப்ரமண்ய பாரதியைச் செப்புக தினம்! (தோ)

அநுபல்லவி

சுவை நிலாவை நாம் எலாம் மிக வின்பத்தால்
சொந்தத் தமிழ் நாடாம் இந்தப் பெருவானில்
சந்தித்தோமே (தோ)

சரணம்

ஓய்ந்த தமிழரிடம் உணர்வினை யூட்டும்!
உலக மனிதர் சமம் எனநிலை நாட்டும்!
தீய மறை வகற்றி அகத் தெழில் கூட்டும்!
செகம் பெறும் ஒவ்வொரு பாட்டும்!
தாகிடஜெம் தாகிடஜெம் தகும் தரிகிடதக தத்தரிகிடதக
தளாங்கு தகதிகதொக ததிங்கிணத்தோம்—தளாங்கு
ததிங்கிணத்தோம் ததிங்கிணத்தோம். (தோ)

—

# பாரதியார் நாமம் வாழ்க!

—o—

வாளேந்து மன்னர்களும் மானியங்கொள்
புலவர்களும் மகிழ்வாய் அந்நாள்
தாளேந்திக் காத்தநறுந் தமிழ்மொழியைத்
தாய்மொழியை உயிரை இந்த
நாள்ஏந்திக் காக்குநர்யார்? நண்ணுநர்யார்?
என அயலார் நகைக்கும் போதில்,
தோளேந்திக் காத்தஎழிற் சுப்ரமண்ய
பாரதியார் நாமம் வாழ்க!

கிளைத்தமரம் இருந்தும்வெயிற் கீழிருந்து
வாடுநர்போல் நல்வின் பத்தை
விளைத்திடுதீந் தமிழிருந்தும் வேறுமொழி
யே வேண்டி வேண்டி நாளும்
களைத்தவர்க்கும் கல்லாத தமிழர்க்கும்
கனிந்தபடி தோலுரித்துச்
சுளைத்தமிழாற் கவியளித்த சுப்ரமண்ய
பாரதியார் நாமம் வாழ்க!

தமிழ்க்கவியில், உரைநடையில், தனிப்புதுமை
சுவையூட்டம் தந்து, சந்த

அமைப்பினிலே ஆவேசம், இயற்கையெழில்,
நற்காதல் ஆழம் காட்டித்
தமைத்தாமே மதியாத தமிழர்க்குத்
தமிழறிவில் தறுக்குண் டாக்கிச்,
சுமப்பரிய புகழ்சுமந்த சுப்ரமண்ய
பாரதியார் நாமம் வாழ்க!

மக்களுயர் வாழ்க்கையிலே மாதர்க்கு
விடுதலையை மறுத்தி ருக்கும்
துக்கநிலை தனையகற்றித் தூயநிலை
உண்டாக்கிப் பெண்மை தன்னில்
தக்கதொரு தாய்த்தன்மை, சமத்வநிலை
காட்டி, உயிர் தளிர்க்கும் காதல்
துய்க்கும்விதம் எழுத்தளித்த சுப்ரமண்ய
பாரதியார் நாமம் வாழ்க!

பழங்கவிகள் படிப்பதற்கோ பழம்படிப்புப்
பெரியாரின் துணையும் வேண்டும்.
விழுங்குணவை விழுங்குதற்கும் தமிழர்க்கோ
ஊக்கமில்லை. கட்டா யத்தால்
வழங்குதற்கோ ஆட்சியில்லை; தெளிதமிழிற்
சுவைக்கவியால் மனத்தைஅள்ளித்
தொழும்பகற்றும் வகைதந்த சுப்ரமண்ய
பாரதியார் நாமம் வாழ்க!

மிதிபெருக்கும் மனிதர்களும், நெடுந்தேக
பக்தர்களும், தலைவர் தாமும்,
கதிபெருக்க ஏடெழுதும் ஆசிரியர்
என்பவரும் கவிதையென்றால்
மிதிஎன்பார்! தமிழ்க்கவியைப் புதுவகையில்
மேலெழுப்பிக் கவிகள் தம்மைத்
துதிபுரியும் வகைதந்த சுப்ரமண்ய
பாரதியார் நாமம் வாழ்க!

பேசுகின்ற தமிழினிலே சுவைக்கவிதை
தரவறியாப் பெரியோரெல்லாம்,
பேசுகின்ற தமிழினிலே தமிழரெல்லாம்
வேண்டுவன பெறுதல்கண்டும்,
ஏசுகின்றார். அவர்சகிதம் தமிழ்க்கவிதை
யுலகினிலே எசமான் ஆன
தூசகன்ற தமிழ்ப்புலவர் சுப்ரமண்ய
பாரதியார் நாமம் வாழ்க!

அயர்லாந்தில் வெர்ஹேறரன் எனுங்கவிஞன்
ஐரிஷ்மொழி வளரச்செய்தான்!
அயர்லாந்தில் அதன்பிறகே உணர்வுபெற
லாயிற்றென் றறிஞர்சொல்வார்.
பெயர்பெற்ற கவிதைகளின் பெற்றியினைத்
தமிழர்களும் காணச்செய்து
துயர்நீக்கும் சுடர்க்கவிஞர் சுப்ரமண்ய
பாரதியார் நாமம் .வாழ்க!

எல்லையற்ற ஆதரவும் பொருள்வலியும்
இசைந்திருந்த ஷேக்ஸ்பியேரும்,
சொல்லும்விக்டர் உய்கோவும், டால்ஸ்டாயும்,
ரவீந்திரனும் சொந்தநாட்டில்
நல்லசெயல் செய்தார்கள்! நடைப்பிணங்கள்
மத்தியிலே வறுமை என்னும்
தொல்லையிலும் தொண்டுசெய்த சுப்ரமண்ய
பாரதியார் நாமம் வாழ்க!

வாழ்கஎழிற் பாரதியார் திருநாமம்
வையமிசை எந்தநாளும்!
வாழ்கதமிழ்! தமிழ்க்கவிதை! தமிழ்நாட்டார்
மாவீர ராகி எங்கும்!
வாழ்க அவர் வகுத்தநெறி வருங்கவிதா
மண்டலமும் கவிஞர்தாமும்!
வாழ்க நனி சமத்துவநல் லுதயமதி
வார்ந்தபுகழ் நிலவு நன்றே!



# பாரதி பாதை

—o—

எட்டையாபுரத்திலே, தேசீயக்கவி சுப்பிரமணிய பாரதியாருக்கு, அழகிய மண்டபம் அமைத்துச், சீரிய முறையில் விழா நடத்தினர்.

பரங்கியாட்சியை ஒழித்தாக வேண்டுமென்ற ஆர்வத் தீ கொழுந்துவிட்டெரியும் உள்ளத்துடன் வாழ்ந்தவர் பாரதியார். தாயகத்தில் உலவத் துரைத்தனத்தார் தடை விதித்ததால், புதுவையில் தங்கிப், புதுப்பாதை வகுத்தார் பாரதியார்.

அவருக்குக் 'காணிக்கை' செலுத்த ஆட்சி அலுப்பையும் பொருட்படுத்தாது, ஆச்சாரியார் வந்தார்—ஆயிரக் கணக்கான தமிழர்கள் கூடினர்-இசைவாணர்கள்—கலைவாணர்கள்—எழுத்தாளர்கள் பற்பலர்.

'கல்கி' ஆசிரியர், இப்பணியினைத் திறம்பட நடத்தி முடித்தார். விழாச் சொற்பொழிவுகளில், நாவலர் பாரதியார், சிவஞானக் கிராமணியார், ஜீவானந்தம், நாமக்கல்லார், எழுத்தாளர் சங்கத் தலைவர் பெ. தூரன் ஆகிய பலரும் கலந்துகொண்டனர்.

நண்பர் சிவஞானம் பெருமிதத்துடன் கூறினார், "அதிகாரமற்ற கரம் அஸ்திவாரக்கல் நாட்டுகிறதே என்று, முன்பு ஆயாசப்பட்டேன் இன்றோ, ஆளும் கரம், மணிமண்டபத்தைத் திறந்துவைத்தது கண்டு

அகமகிழ்கிறேன்" என்று. உண்மை. வங்கமாளும் ஆச்சாரியார், மணி மண்டபத்தைத் திறந்தார். வறுமையாளராகக் கவனிப்பாரற்று, நாடு கடத்தப்பட்டு நலிவுற்றிருந்த பாரதியாருக்கு, நாடு முழுவதும் கொண்டாடும் அளவினதான விழா நடந்தேறியது.

பாரதியாரின் கவிதைத்திறன், அதனாலாய பயன், மறுக்கமுடியாதன. பாரதியாரின் தனிப்பண்புகளை, அவரை அந்நாளில் அறிந்தவர்கள் கூறிடக் கேட்டால், புதுஉலகு காண விழைபவர்களின் அகமெலாம் மகிழும். புரட்சிக்கவிஞர் பாரதிதாசன், பாரதியாரைக் குறித்துப் பேச ஆரம்பித்தால், அவருடைய கண்களிலே ஓர் புத்தொளி தோன்றிடக் காணலாம்.

பாரதியாரின் காலம் வேறு; இக்காலம் வேறு. எனவே, இன்றுள்ள எண்ணங்களை எல்லாம் அவர் அன்றே ஆய்ந்தறிந்து கூறியிருக்கவேண்டுமென்றோ, நாம் எடுத்துரைப்பதும், வரலாற்று உண்மையுமான ஆரிய—திராவிடப் பிரச்சினையை அவர் கூறியிருக்க வேண்டுமென்றோ நாம் எதிர்பார்ப்பதற்கில்லை. அவருடைய பாடல்களிலே பல இடங்களில், அவர், 'ஆரியர்' என்ற சொல்லை, உயர்த்தியேதான் பாடி இருக்கிறார். அந்தக் காலம், நாமெல்லாம் பள்ளிகளில் 'ஆரிய மத உபாக்கியானம்' எனும் ஏட்டினைப் பாடமாகப் படித்த காலம். நம் தலைவர், தமிழ் நாட்டுக் காங்கிரசிலே பெருந்தலைவராக இருந்த காலம்.

ஆரியர்-திராவிடர் பிரச்சினை, ஓர் ஆராய்ச்சி—வரலாறு. இதனை நாம், பாரதியாரிடம் காண்பதற்கில்லை.

ஆரியம் என்பது, ஓர் வகைக் கலாச்சாரம்—வாழ்க்கை முறை.

திராவிடம், அதுபோன்றே, தனியானதோர் வாழ்க்கை முறை.

இது, இன்று விளக்கமாக்கப்படுவதுபோல, பாரதியாரின் நாட்களில் கிடையாது.

பல ஜாதி—பல தெய்வ வணக்கம்—பற்பல விதமான மூட நம்பிக்கைகள்—தெய்வத்தின் பெயர்கூறித் தேசத்தின் பொருளைப் பாழாக்கும் கேடு—இவைதாம் ஆரியம்!

'ஒன்றேகுலம், ஒருவனே தேவன்' இது திராவிடம்.

இரண்டிலே எது நல்லது? எந்தக் கலாச்சாரத்துக்கு நீர் ஆதரவு தருவீர்? என்று பாரதியாரைக் கேட்க, யாருக்கும் வாய்ப்பில்லை. கேட்டிருந்தால், நிச்சயமாக அவர் திராவிடக் கலாச்சாரத்தையே விரும்பியிருப்பார். அவருடைய பாடல்களில்—பிற்காலப் பகுதிகளில்- இந்தச் சூழ் நிலை இருக்கக் காணலாம்.

பாரதியார் விஷயத்தில் பகுத்தறிவாளர்களுக்குள்ள மதிப்பு, முதலில், பரம்பரை வழக்கப்படி அவர் தேவியின் வரப்பிரசாதம் பெற்றதாலோ, முனிவர் அருளாலோ, பஞ்சாட்சர உபதேசப்பலனாலோ, பாட ஆரம்பித்தார் என்று அருட்கவியாக்காது விட்டார்களே, அதுதான்.

நாமகளைத் துதித்தார்—நாலைந்து ஆண்டு—பலன் இல்லை. பிறகோர் நாள், 'அம்மே! இனி நான் உயிர்

வாழேன்' என்று கூறி, நாவை அறுத்துக்கொள்ளக் கிளம்பினர்; உடனே களுக்கென ஓர் சிரிப்பொலி கேட்டது; அம்மை பிரசன்னமாகி, 'பாலகா! பாடு!' என்ருள்- உடனே அவர் பாடலானுர்—பாடினர், பாடினர், பார் முழுதும் பாடல் பரவும்வரை பாடினர் என்று, பாரதியார் புராணம் கட்டாதவரையில், நமக்கெல்லாம் மிகக் களிப்பு! நமக்குக் களிப்பு என்பது மட்டுமல்ல, பாரதியாருக்கே உண்மையில் பெருமை. அவர் நாமகள் பூமகள் அல்லது வேருேர் தேவனின் அருள் பெற்றவரல்லர்; அவர் ஓர் கவி, சிந்தனையில் பட்டதைச் செந்தமிழில் கவிதை யாக்கினவர் என்பதனுல்தான்.

கூடுமானவரையில், பாரதி விழாச் சொற்பொழிவாளர்கள். அவருடைய அருமை பெருமைகளை எடுத்துரைக்கையில், 'புராணம்' பேசாதிருந்ததுபற்றி நாம் மகிழ்கிருேம். அன்பர் ஆச்சாரியார் மட்டும், பாரதியாரை, ஓர் 'முனிவர்' என்று கூறினர் ஆனல் அதற்கும், அவர் வழக்கமான பொருள் கூறத் துணியார்.

பாரதியாருக்குள்ள பெருமை, முதலில் இது. மற்ருேர் பெருமை, அவர், தம்முடைய நாட்களிலே, மற்றவர்களை ட வேகமாக முன்னேற்றக் கருத்துகளைப் பாடி, அதன் பயனக அவருடைய சமூகத்தாராலேயே வெறுக்கப்பட்டு, "பார்ப்பனமேதைகள்" என்போரால் அலட்சியப் படுத்தப்பட்டு, வறுமையில் வாடி, அன்னிய ஆட்சியாளரின் அடக்குமுறைக்கு ஆளாகி, அல்லலை அனுபவித்து, அந்த அல்லலால் மனம் உடையாமல், நோக்கம் மாருமல் அரைக்க அரைக்க மணக்கும் சந்தனமானரே, அந்தப் பண்பு.

அவருடைய பண்பு, ஜாதிக்கட்டுக்களை உடைத் தெறியக் கூடியதாக இருந்தது என்பது, அவருடைய கவிதைகளிலே, பல ரசமான இடங்களில் தெரிகிறது.

அவருடைய நாட்டுப்பற்றும், மொழிப்பற்றும் அந்த நாட்களில் கையாண்டி செய்யப்பட்டது! இன்று, அவருக்கு மகாகவி என்ற பட்டம் தரவும், பளிங்கு மண்டபம் கட்டவும் தமிழகம் முன் வந்தது! கவிஞரைப் போற்றும் மாண்புக்கும், அதைக் கவர்ச்சிகரமான முறையிலே நடத்திக்காட்டிய கல்கியின் திறமைக்கும், நமது பாராட்டுதல்.

"பாரதி மண்டபத்தை, விழாவுக்காகப் போடப்பட்ட பந்தல் மறைத்துக்கொண்டிருக்கிறது" என்று, அன்று ஆச்சாரியார் பேசினர்.

மண்டபத்தைப், பந்தல் மறைக்கிறது !

மண்டபத்தை மட்டுமல்ல! தேசியக் கவிதைகள் என்ற ஒரு பகுதியை மட்டுமே பெரிதாக்கி நாட்டிலே பரப்பிக் காட்டுவதால் பாரதியாரின் முழு உருவம், மக்களின் கண்களுக்குத் தெரியவொட்டாதபடி மறைக்கப்படுகிறது !

பாரதியார், தோத்திரப் பாடல்கள் பல பாடினர். ஆனல், தேவார திருவாசகமும், திருவாய் மொழியும் பாடியானபிறகு பாடினர். எனவே, அவருடைய கவிதைகளிலே, தோத்திரப்பகுதி முக்கியமோ, அவருடைய, பெருமைக்குச் சான்ருே ஆகாது, வைதீகர்களின் நோக்கத்தின்படியேகூட,

பாரதியார், வேந்தாந்தப் பாடல்கள் பல பாடியுள் ளார். ஆனல் அவருக்கு முன்னர்த் தாயுமானுரும் வள்ள லாரும் பாடிவிட்டனர். எனவே, அந்தப் பகுதியும் பழம் பதிப்புப் போன்றதுதான்.

அவருடைய நாட்டுப்பற்றுப் பாடலே, அவருடைய கவிதைகளில் மிக முக்கியமான-மற்றக் கவிகள் பாடாத காலத்திற்கேற்ற பலன் அளித்த பகுதி.

விடுதலைப்போர் புரிய அவருடைய கவிதைகள் தக்க கருவியாயின. எனவேதான், வெள்ளையன் வெளியேறிய விழாவுக்கு அடுத்ததாக, பாரதி மண்டபத் திறப்புவிழா நடைபெற்றது.

ஆச்சாரியார் சொன்னுர், "அன்னிய ஆட்சியை எதிர்த்து இந்தியாவின் பல்வேறு பகுதிகளில், பல கவிகள் பாடல்கள் இயற்றினர். தமிழர்களுக்கு தமிழ்க் கவிதானே பயன்பட முடியும்? பாரதியார், அந்த வகையிலே தமிழருக்குப் பயன்பட்டார்" என்று.

ஆகவே, பாரதியாரின் பக்திப்பாடல் வேதாந்தப் பாடல் இவைகளைவிட, நாட்டுப்பற்றுப் பாடலே மகத் தான பலன் தந்தது! விழாக் கொண்டாடின அன்பர் கள் இந்தப் பகுதியைத்தான் விளக்கினர்கள் விஸ்தார மாக. மதுரை முஸ்லீம் தோழர் ஒருவர், "பாரதியாரின் பாடல் ஆங்கிலேயரை ஒட்டிய அணுக்குண்டு" என்று கூறினர். தமிழகத்திலே காங்கிரசின் வெற்றிக்குப் பாரதியார் பாடல் மிகமிகத் தாராளமாகப் பயன்பட்டது. பயன்படுத்திக்கொண்டு பாராளும் அளவு உயர்ந்த பலர், பாரதியாரை ஏதோ ஓர் சமயத்திலே மட்டும் எண்ணுவ

துடன் இருந்தனர். இக்குறையைப் போக்கி கவிஞரின் நினைவுக்குறியாக ஓர் அழகிய மண்டபத்தை அமைத்தார் கல்கி.

ஆச்சாரியார் சொன்னாரே பந்தல் மண்டபத்தை மறைக்கிறது என்று. அதுபோல,பாரதியாரின் தேசியப் பாடல்களை மட்டுமே பரப்பிய காரணத்தால், நாட்டவருக்குப் பாரதியாரின் முழு உருவமும் தெரியவில்லை! இனியாவது தெரியுமா என்றால், தெரியச் செய்தாலொழியத் தெரிவதற்கில்லை என்றே கூறலாம்.

"ஆடுவோமே பள்ளு பாடுவோமே!"

"வந்தே மாதரம் என்போம்"

"செந்தமிழ் நாடென்னும் போதினிலே"

"தாயின் மணிக்கொடி பாரீர்"

"ஜேய ஜேய பாரத"

இப்படிப்பட்ட பல தேசியப் பாடல்களை, நாட்டு மக்களின் செவிக்கும் சிந்தனைக்கும் கொண்டுவந்துள்ளனர். பாரதியார் அவ்வளவுதானா? அல்ல! பாரதியாரின் முழு உருவம், அதுவல்ல! அடிமை நிலை போக வேண்டும் என்ற கோபநிலையில் உள்ள பாரதி அது. ஆனால், அதைத் தாண்டி, நாட்டு உள்நிலை, மக்கள் மன நிலை இவைகளைக் கண்டு மனம் நொந்து வேதனைப் படும் பாரதி இருக்கிறார்! மக்களின் மந்த மதியினைக் கண்டு, அவர்களைத் திருத்தவேண்டும் என்ற ஆவல் கொண்டு, துடிக்கும் பாரதி இருக்கிறார்! நாடு எப்படி எப்படி இருக்கவேண்டும்? சமூகம் எவ்வண்ணம் அமைய வேண்டும்? என்ற இலட்சியம்கூறும் பாரதி இருக்கிறார்!

தேசியப் பாரதியின் உருவம் இத்தனை பாரதிகளை மறைக்கிறது, ஆச்சாரியார், பந்தல் மண்டபத்தை மறைக்கிறது என்று கூறினரே அதுபோல!

பெரியபந்தல், விழாவுக்காக. மண்டபமோ கவியின் பெருமைக்குரிய சின்னம். விழா முடிந்ததும் பந்தலைப் பிரித்துவிடுவார்கள்—மண்டபம் நின்று அழகளிக்கும். அதுபோல், பாரதியாரின், 'தேசியக்கவிதை,' அன்னியரை ஓட்டும் அரும்பணிக்காக மட்டுமே அமைவது. அந்தக் காரியம் முடிந்ததால், இனி அந்தப் பந்தலுக்கு அவசியமில்லை. அவசியமில்லாததால் அது எடுபடும். அது எடுபட்ட பிறகுதான், பாரதியாரின் மனம் தெரியும். பாரதியாரின் முழு உருவமும் தெரிய, அவருடைய கவிதா சக்தியின் முழுப்பயனையும் பெற, அப்போது தான் முடியும்.

இனியும் மேடைகளிலே ஏறி, 'தாயின் மணிக் கொடி பாரீர்' போன்ற தேசபக்திப் பாடல்களை மட்டுமே பாடிப் பயனில்லை.

தாயின் மணிக்கொடி பார்க்கிறோம்; இங்கே காயும் வயிற்றையும் காண்பீர் என்று, மக்கள் முழக்கமிடுவர்! எனவே, எந்தப் பகுதியை மட்டும் அதிகமாகப் போற்றி நாட்டுக்கு எடுத்துரைத்து வந்தார்களோ, அந்தத் தேசியப் பாடல் பகுதிக்குள்ள பயனும் ஜொலிப்பும், இனி இராது! ஆகவே, பாரதி பயன் இல்லையா? அல்ல, அல்ல! பயனுள்ள பகுதி, பலரறியாப் பாரதி! மறைக்கப்பட்ட பாரதி, இனித்தான் மக்களுக்குத் தெரியவேண்டும். தேசியக் கவிக்கு அப்பால்

நிற்கிறார், அந்தப் பாரதி! அந்தப் பாரதி, ஆங்கிலேயனை ஆரியப் பூமியிலிருந்து விரட்டும் பாரதி மட்டுமல்ல; நாட்டை விட்டுக் கேட்டினை எல்லாம் ஓட்டவேண்டுமென்று கூறும் பாரதி! மேடைகளிலே, இதுவரை நிறுத்தப்படாத பாரதி! தேசபக்தர்களின் நாவிலே நின்று, இதுவரை நர்த்தனமாடாத பாரதி! மறைந்திருக்கிறார், பொன்னுலான பெட்டிக்குள் முத்துமாலை இருப்பதுபோல! அந்தப் பாரதியை நாம் அறிமுகப் படுத்தினால், விழாக் கொண்டாடியவர்களிலேயே பலருக்கு, முகமும் அகமும் சுருங்கக்கூடும்! ஆனால், அந்தப் பாரதி, நெடுநாட்களுக்கு மறைந்திருக்க முடியாது. வெளிவந்தாலோ, இன்று அவரை வந்திருக்கும் பலரே, நிந்திக்கவும் கூடும்! இதோ அந்தப் பாரதி—பந்தலால் மறைக்கப்பட்டுள்ள மண்டபம்!

பண்டைப் பெருமை—பழங்கால மகிமை—அந்த நாள் சிறப்பு — என்றெல்லாம் பேசுகிறார்களே, அவர்களை நாம் எவ்வளவோ கௌரவமாகத்தானே கேட்கிறோம், "ஐயோ! பழைய காலத்தைக் கட்டிப் பிடித்தழுகிறீரே, இது சரியா?" என்று.

பலருக்குத் தெரியாத முழுப் பாரதி, அவர்களை இலேசில் விடவில்லை! 'மூடரே!' என்று அவர்களை விளிக்கிறார், கேட்கிறார் அவர்களை.

"முன்பிறந்ததோர் காரணத் தாலே
மூடரே, பொய்யை மெய்யென லாமோ?
முன்பெனச் சொல்லும் கால மதற்கு
மூடரே, ஓர்வரை துறை யுண்டோ?

முன்பெனச் சொல்லின், நேற்று முன்பேயாம்
மூன்றுகோடி வருடமு முன்பே!
முன் பிறந்த தெண்ணிலாது புவிமேல்
மொத்த மக்களெலா முனிவோரோ?
நீர் பிறக்கு முன் பார்மிசை மூடர்
நேர்ந்ததில்லை என நினைத்தீரோ?
பார் பிறந்ததுதொட் டின்றுமட்டும்
பலபலப்பல பற்பல கோடி!
கார்பிறக்கு மழைத்துளி போலே
கண்ட மக்க ளனைவருள்ளேயும்,
நீர் பிறப்பதன் முன்பு மடமை
நீசத்தன்மை இருந்தன வன்றோ?''

*பழமை விரும்பி, என்ன எண்ணுவான் பாரதி யாரைப்பற்றி?*

"சென்றதினி மீளாது மூடரே நீர்
எப்போதும் சென்றதையே சிந்தை செய்து
கொன்றழிக்கும் கவலையெனும் குழியில் வீழ்ந்து
குமையாதீர்; சென்றதனைக் குறித்தல் வேண்டா,
இன்று புதிதாய்ப் பிறந்தோம் என்று நெஞ்சில்
எண்ணமதைத் திண்ணமுற இசைத்துக்கொண்டு
தின்றுவிளை யாடி இன்புற் றிருந்து வாழ்வீர்
தீமையெலாம் அகன்றுபோம் திரும்பி வாரா."

*மற்றுமோர் சாட்டை, வெந்ததைத் தின்று வாயில் வந்ததைப் பேசுபவர்களுக்கு வகையாகத் தருகிறார் பாரதி! "சென்றது இனி மீளாது," மூடரே! மனுதர்மம் இருந்ததே! அரசுகளிலே ஆதிக்கம் இருந்ததே! நமது*

வலக்கரத்திலே அக்னி இருந்ததே! நம்மைக் கண்டதும், மற்றவர்களுக் கெல்லாம் பயபக்தி இருந்ததே! இவை எல்லாம் இன்று இல்லையே! மீண்டும் கிடைக்கப் பெறு வோமா என்றெல்லாம், எண்ணி எண்ணி ஏங்காதீர்! "சென்றது இனி மீளாது!" என்று திட்டமாகக் கூறு கிறார். 'கூறுகிறேன் கேளுங்கள் மூடர்களே!' என்று, இடித்துரைத்துப் பேசுகிறார். இந்தப் பாரதி, மேடை யிலே தோன்றாத பாரதி!

"சேத்தபிறகு சிவலோகம் வைகுண்டம்
சேர்ந்திடலாமென்றே எண்ணி யிருப்பர்
பித்தமனிதர்"

o o o

"சாதிக் கொடுமைகள் வேண்டாம்-அன்பு
தன்னிற் செழித்திடும் வையம்"

o o o

"அரும்பும் வியர்வை உதிர்த்துப் புவிமேல்
ஆயிரம் தொழில் செய்திடு வீரே!
பெரும்புகழ் உமக்கே இசைக்கின் றேன் நான்
பிரமதேவன் கலையிங்கு நீரே"

o o o

"பெண்ணுக்கு விடுதலைநீர் இல்லை யென்றால்,
பின்னிந்த உலகினிலே வாழ்க்கை இல்லை!"

தேசியக் கவிஞரால் மறைக்கப்பட்டுள்ள புரட்சிக் கவிஞர் தெரிகிறார், இன்னும் தெளிவாக!

"நெஞ்சு பொறுக்கு தில்லையே—இந்த
நிலைகெட்ட மனிதரை நினைந்து விட்டால்"

என்று சோகிக்கிறார் பாரதி! ஏன் நிலைகெட்டுவிட்டது? தேசியக் கவியாகமட்டும் இருப்பின், பரங்கி பிடித்தாட்டப் பாரதநாடு பரதவித்தது என்றுமட்டுமே கூறுவார். ஆனால், பலருக்குத் தெரியவிடாதபடி மறைக்கப்பட் டிருக்கும் முழுப்பாரதி, பேசுவதைக் கேளுங்கள்.

"அஞ்சி அஞ்சி சாவார்—இவர்
அஞ்சாத பொருள் இல்லை அவனியிலே!
வஞ்சனை பேய்களேன்பார் இந்த
மரத்திலேன்பார் அந்தக் குளத்திலேன்பார்!
துஞ்சுது முகட்டிலேன்பார்!—மிகத்
துயர்ப்படுவார், எண்ணிப் பயப்படுவார்!
மந்திரவாதி யென்பார்—சொன்ன
மாத்திரத்திலே மனக் கிலி பிடிப்பார்!
யந்திர சூன்யங்கள்— இன்னும்
எத்தனை யாயிரம் இவர் துயர்கள்!"

o o o

சாடுகிறார், சாடுகிறார், மூட நம்பிக்கைகளை!

"கொஞ்சமோ பிரிவினைகள்?—ஒரு
கோடி யென்றால் அது பெரிதாமோ?
ஐந்துதலைப் பாம்பென்பான்—அப்பன்;
ஆறுதலை யென்று மகன் சொல்லிவிட்டால்,
நெஞ்சு பிரிந்திடுவார்—பின்பு
நெடுநாள் இருவரும் பகைத்திருப்பார்!"

இங்ஙனம், சமுதாயத்திலே உள்ள கேடுகளை - மனதிலேயுள்ள தளைகளை—மூடக்கொள்கைகளைத் தாக்குகிறார், தமது கவிதா சக்தியைக்கொண்டு!

'பாரதியாரா?' என்று ஆச்சரியத்துடன் நாடு கேட்கும், அவர் சொன்ன தத்தனையும் சொல்லப்போனல்! ஆனல், அந்தப் பாரதியாரை, அரும்பாடுபட்டு மறைத்திருக்கிறார்கள்!

"பார்ப்பானை ஐயனென்ற காலமும் போச்சே!"

என்ற ஒரு வரியைக்கூட, அவர் சொன்னதாகச் சொல்ல அஞ்சி மறைத்தனர், அருந்தமிழ் நாட்டவர் தான்! பாரதியார், அந்தச் சமுதாயத்தை மேலும் என்னென்ன கூறினர் என்று தெரிந்தால்தானே, பாரதியாரின் முழு உருவம் தெரியும்?

"இந்நாளிலே பொய்ம்மைப் பார்ப்பார்—அவர்
ஏது செய்தும் காசு பெறப்பார்ப்பார்!
பிள்ளைக்குப் பூணூலா மேன்பான்—நம்மைப்
பிச்சுப் பணம் கோடெனத் தின்பான்!
பேராசைக்காரனடா பார்ப்பான்!—ஆனல்
பெரியதுரை என்னில் உடல் வேர்ப்பான்!
யாரானலும் கொடுமை செய்வான்!—பணம்
அள்ளி இடவில்லை யெனில் வைவான்!"

மகாகவி பாரதியின் வாக்கு, பேராசைக்காரனடா பார்ப்பான்! என்பது. மேடைகளிலே கேட்டதுண்டா? பாரதி சிறப்புவிழாக் கூட்டங்களிலே, இந்தப் பாரதி தெரிந்தாரா? இல்லை! அவர் மறைந்திருக்கிறார், மண்டபம் பந்தலால் மறைக்கப்பட்டிருப்பதுபோல! விழா முடிந்தது; பந்தலும் பிரிக்கப்பட்டது; மண்டபம் தெரிகிறது என்பது போல, வெள்ளையர் வெளியேறும் விழா முடிந்தது! இனித், தேசியக் கவிதை அலங்காரத்

தைக் கடந்து நிற்கும், பாரதி காணவிரும்பிய புது சமுதாயம்!

"ஏழை என்றும் அடிமை என்றும்
எவனுமில்லை, ஜாதியில்
இழிவுகோண்ட மனிதரேன்போர்
இந்தியாவில் இல்லையே!"

என்ற இலட்சியம் ஈடேறிய நிலைபெற்ற சமுதாயம், மனிதர் உணவை மனிதர் பறிக்கும் வழக்கமில்லாத சமுதாயம், பழமை மோகத்தில் படியாத சமுதாயம், காசியில் பேசுவதைக் காஞ்சியிலுள்ளோர் கேட்பதற்கான கருவி செய்யும் சமுதாயம், அத்தகைய புதிய சமுதாயத்தைக் காண விரும்பிய பாரதி நிற்கிறார். ஆனால் அவரைப், பந்தல் மறைத்துக்கொண்டிருக்கிறது! அவரை, நாட்டுக்குத் தெரியவிடாதபடி செய்வதில், பலருக்கு இலாபம் இருக்கிறது! எனவே. தேசியக் கவிமட்டுமே தெரியவேண்டும் என்று எண்ணி ஏற்பாடுகள் செய்வார்! ஆனால், அந்த எண்ணமும் ஈடேறுவதற்கில்லை. மக்களுக்குத் தெரிய ஒட்டாது அவர்கள் மறைத்து வைத்துள்ள பாரதியார், உண்மையில் மறைந்துவிடவில்லை. அதோ பாடுகிறார், கேளுங்கள்.

"இருட்டறையில் உள்ளதடா உலகம் ஜாதி
இருக்கின்ற தேன்பானும்......"

இது பாரதிதாசன் குரல் அல்லவா? என்பீர்கள். ஆம்! பாரதிதாசன்தான்! அவர்தாம், மணிமண்டபத்தைவிட விளக்கமாக, முழுப் பாரதியைத் தமிழகத்

துக்குத் தரும் அரும்பணியாற்றுகிறார், அவரிடம் நாங்கள், முழுப் பாரதியாரைக் காண்கிறோம். களிக்கிறோம், வாழ்த்துகிறோம்.

"அச்சம் தவிர்
ஆண்மை தவறேல்
உடலினை உறுதி செய்
எண்ணுவ துயர்வு
ஏறுபோல் நட
ஒற்றுமை வலிமையாம்
ஔடதங் குறை
கற்ற தொழுகு
கால மழியேல்
குன்றென நிமிர்ந்து நில்
கூடித்தொழில் செய்
கைத்தொழில் போற்று
கொடுமையை எதிர்த்து நில்
சரித்திரத் தேர்ச்சிகொள்
சாவதற் கஞ்சேல்
சிதையா நெஞ்சுகொள்
சூரரைப் போற்று
சோதிடந் தனையிகழ்
தெய்வம்நீ என்றுணர்
தையலை உயர்வு செய்
தொன்மைக் கஞ்சேல்
நினைப்பது முடியும்
நூலினைப் பகுத்துணர்
நெற்றி சுருக்கிடேல்

பிணத்தினைப் போற்றேல்
புதியன விரும்பு
பேய்களுக் கஞ்சேல்
போர்த்தொழில் பழகு
முனையிலே முகத்துநில்
மேழி போற்று
யாரையும் மதித்துவாழ்"

இவை, பாரதியாரின் புதிய ஆத்திசூடி! புதிய பாதை! பாரதி பாதை! தேசிய மணி மண்டபத்தோடு முடிந்து விடுவதல்ல, அதற்கும் அப்பாலுள்ள சமதர்ம புரிக்குப் போவதற்கு அமைந்த பாதை! அந்தப் பாரதி பாதையை அமைத்துக்கொண் டிருக்கும் — அரும்பணி யாற்றும் நாம், பாரதியார் பெற்ற சிறப்புக்கண்டு பெருமை யடைவதுடன், பாரதியாரின் முழு உருவமும் மக்களுக்குத் தெரியச் செய்யும் காரியத்தையும் மேற் கொண்டுள்ளோம் பாரதி காட்டிய பாதையை, நாடு நன்கு அறியவேண்டும்! பரங்கியை ஓட்டிவிடுவது மட்டு மல்ல அது. நாட்டின் கேட்டுக்குக் காரணமாக உள்ள தனைத்தையும் ஓட்டிப், புதிய சமூக அமைப்பாக்கும் பாதை! அந்தப் பாரதி பாதையை நாம் போற்று கிறோம்!




ஸ்ரீமகள் அச்சகம், சென்னை-1